

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஜெயங்கொண்டார் சதகம்.

## திருமுகவிலாசம்.




ஆறுமுகவிலாச புத்தகசாலை

௧௬௫, பவழக்கார வீதி

சென்னபட்டணம்.




இதன் விலை அணா உ.

உ

சிவமயம்.

# ஜெயங்கொண்டார் சதகம்.

மதுரைச்சாமை சிவகங்கை சமஸ்தானம்

கீழைச்செவற்பட்டு

இளையாத்தங்குடி எழுநகரமென்றுசொல்லப்பட்ட

நேமநகரத்திலிருந்த

அழகப்பசெட்டியார் குமாரர்

முத்தப்பசெட்டியார் அவர்களியற்றியது.

இஃது

மேற்படியார் பௌத்திரர்

நாராயணஞ்செட்டியார்

கேட்டுக்கொண்டபடி

திருக்கைலாயபரம்பரைச் சேர்ந்த சங்கத்தி லொருவராகிய

சிதம்பரம்

அ. இரத்தினசபாபதிமுதலியாரால்

சென்னை:

[illegible] பலாஜிகல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1896.



சிவமயம்

## ஊனையூர்ப் பாரதியாரவர்கள் இயற்றியது.

இங்குபகமாகூரனைக் கண்டோடியொளிந்தார்விசையன்
வாங்குத்தனுவால்பூசைவாங்கினன்—ரீங்கிருக்கும்
தன்னிபமச்சோழீசனூற்செய்யக்கொண்டானென்று
லென்னசெய்யக்கொண்டாரியா

மேற்படியார் பாடிக்கேட்டதற்குப்பதில்

## முத்தப்பசெட்டியாரவர்கள் இயற்றியது

என்னசெய்ய கொண்டாரியவரென்றுன முப்புரத்தைச்
சொன்னமயம் மாயச்சமைத்தச்சோழீசா—பின்னுஞ்
சிரித்துச்செய்யக் கொண்டார்சித்தசனைக் கண்ணு
லெரித்துச்செய்யக்கொண்டாரே



## சுந்தர முதலியார் சொல்லியது

### ஆசிரியவிருத்தம்

திருமதுரைச்சீர்ப்பட்டினாயாற்றறங்குடிச்செட்டிச்மான்னனனு, மு
ருமதனனழகப்பனுதவியமுத்தையனெனுமொப்பிலசிங்க மருமறை
சாத்திரங்களோடாகமங்களபுராணங்களனைத்துந்தேர்ந்து பெருகு
பழமொழிநூறுங்கதைநூறுஞ்சதகமெனப்பேசிறருமால்



உ

சிவமயம்.

# ஜெயங்கொண்டார் சதகம்.

## காப்பு.

### விநாயகர் துதி.

சீர்பொருந்துந்தென்னைமச்செயங்கொண்டசோழீசர்திருப்பேர்வாழ்த்திப், பார்பொருந்துங்குறுவிருத்தப் பாமாலைதனிலுலகப் பழமைச்சொல்லை, யேர்பொருந்துஞ் செந்தமிழால் யான்பாடப்புவியிலுள்ளோரிசைந்துகேட்கக், கார்பொருந்துந்துதிக்காத்தான்வெயிலுகந்தகணபதிதான்காப்புத்தானே.

### முருகர் துதி.

நகரமெல்லாம்பணிந்தேத்துஞ் செயங்கொண்டசோழீசநாயகனுர்மேன், மகரநெடுங்கணுலகவிதந்தியைச்செந்தமிழால்யான்வழுத்துதற்கே, யகரமுதலெழுத்தென்றுறுதியின்முப்பாற்சொன்னவவன்றாள்போற்றிச், சிகரவரைமீதெழுந்தசிறந்தவடிவேலவன்றாள்சென்னிசேர்ப்பாம்.

### கலைவாணி துதி.

சிலைவேளைவென்றபிரான்றன்னைமநகரில்வளர்செயங்கொண்டார்மே, லுலகிலுள்ளோர்வழக்கமதாய்ச்சொன்னசொல்லைத்தமிழாலேயுரைப்பதற்குக், கலைவாணியாகியுலகுள்ளமட்டும்படிக்கவந்தகவிதைதன்னின், மலர்வேதன்மனைவியென்றன்மனத்திலிருந்திவ்வுரையையெழுத்துவாளே.

அவையடக்கம்.

பத்தருளத்தினிற்குடிகொண்டலையென்றெமக்குரைத்த பாமர்மீதில், வித்தகர்முன்னூலகலைமுக்கத்தையெடுத்தொருநூறுவிருத்தஞ்செய்தா. மத்தைநிகரெனச்செயங்கொண்டார்மீதின்முத்தையன்சிற்றறிவினாலே, மத்தகயந்தனக்குமுன்னேசிற்றெறும்புநடந்ததெனவசனித்தேனே.

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

---

### வான்மீகர் கதை.

கல்வேடவான்மீகர்சப்தரிஷிகளைச்சேர்ந்தராமமந்த்ரஞ், சொல்லநாவில்லாதுகற்றறியாமையினமராவெனமுன்சொன்னோர், வில்விசையன்றெம்மையெல்லக்கணைகொடுத்தசெயங்கொண்டார் விளங்குநாட்டிற், கல்விதனக்கழகுகச டறமொழிந்த லெனமுன்னோர் கழறுவாரே. (க)

### மார்க்கண்டர் கதை.

அருமறைமார்க்கண்டர்கித்தந் திருக்கடவூர்வேணியனையன்பாய்ப்பற்றி, வருசமன்றன்பகையடக்கித்தீர்க்காயுளாய்ப்புவியில் வளராநின்றார். தருமைவைதிகர்தென்னேமநகரில்வளர்செயங்கொண்டார்தமிழ்சேர்நாட்டிற், பெருமரத்தைச்சுற்றிநின்றவல்லியுஞ்சாகாதெனவேபேசுவாரே. (உ)

### பாண்டவர்கள் கதை.

அருமைசெறிபாண்டவர்கள்பங்காளிசெய்கொடுமையாற்காடாண்டு, முரிமையுடன்றருமர்செய்தநன்றியினாற்றிரும்பவும்வந்துலகை

யாண்டார், பருவரைவில்லாவளைத்த செயங்கொண்டாரேயெவரும் பண்பாய்ச்செய்த, தருமமேகலைகாக்குயர்மமழுத்தியெனவுஞ்சா ற்றுவாரே! (௩)

## இளையான்குடிமாறர் கதை.

உழுதிளையான்குடிமாறர் முளைவாரியன்னமன்பர்க்குதவிப்பாரில், வழுவாதகீர்த்தியுடனொருநாளுங்கேடில்லாவாழ்வுபெற்றார், முழுவேந்துங்கரதலத்தார் செயங்கொண்டார்வளநாட்டின் மறைகளோதித், தொழுவாரெல்லாமுழுவார்நிலக்கடையிலென்றுலகஞ் சொல்லுமாதோ. (௪)

## கிரவுஞ்சகர்ப்பிரவுபாட்ட கதை.

தஞ்சமெனச்சரண்புகுந்தவமரர்களைப் புரப்பதற்காச்சரவணத்தின், மஞ்சனெனத்தோன்றியசெவ்வேள்வடிவேலாற்கரவுஞ்சமாய்ந்ததன்றோ. செஞ்சரணத்தாலயமனைவென்ற செயங்கொண்டாரே தேவரேனும், வஞ்சநெஞ்சைப்பிளக்குந்துபொய்யல்லவுலகினிசுவாசனந்தானே. (௫)

## இராமர் கதை.

அரியோனைக்கௌசிகன்பால்விடமலைந்தான்றசரதன்விட்டதற்கிலாபங், கரியோன்றனதிகசௌந்தரியனுக்குந்தனுவினுக்குங் கமலத்தார்க்கு,முரியோனுகியமறைதேர்முனியன்றோசெயங்கொண்டாருலகந்தன்னிற், பெரியோரைத்துணைக்கொளென்ற வௌவைவாக்கியத்திலொன்றும்பிசகிராதே. (௬)

## இராமர் வனவாசஞ்சென்ற கதை.

பானுகுலராமனுக்குப்பட்டாபிஷேகமெனப்பகர்ந்தபோது, கூனியொருகூத்திரத்தைக் கொடுக்கவவனூரைவிட்ட கொள்கைபோல, மானணியுங்கரத்தாரே செயங்கொண்டாரேபுவியின்மகிமைசேர்ந்த யானைநிழல்பார்க்கையிலேதவளைவந்துகலக்கிவிடுமதுமெய்தானே.()

## இராவணன் கதை.

தொடைக்கிலங்குமார்பனிலக்குமனன்வில்வலுவென்றுன்சொன்னபேச்சை, யடக்கிராவணனுளையோரம்பாலுன்வெல்லேனறியென்றார்போற், சடைக்கிதழ்மாலையணிசெயங்கொண்டாரேயெதிரிதளத்துக்கஞ்சிப், படைக்குப்போகாதவர்களெல்லசேவகரெனவும்பகருவாரே. (அ)

## வாலி சுக்கிரீபர் கதை.

பேரிலுயர்வாலிசுக்கிரீபரிருவரும்பகையாய்ப்பிரியராமர், காரியத்துக்காகவந்துகடலடைத்துச்சிறைமீட்டகணக்குப்போலே, மேருவைவில்லாய்வளைத்த செயங்கொண்டாரேயுலகில் விளங்குஞ்சொல்லு, மூரிரண்டுபட்டதென்றுற் கூத்தாடிக்கேலாபமுண்டென்பாரே.

## பூதேவி சீதேவி பிறந்த கதை.

செல்லோடே யிணங்குகடற்றிருவுடன்மூதாள்பிறந்த செய்திபாரினல்லோடைச்சலத்தில்சிலபாசிபடர்ந்திடலுந்தனஞ்சயன்கை, வில்லோடேமோதியதோட் செயங்கொண்டாரேவயலில் விளைவுண்டான. நெல்லோடேபதருமசந்தனிலருதரும்பிறந்திருக்குநேர்மைதானே. (௧0)

## சரஸ்வதி கடவுளை நீங்கிய கதை.

நங்கைகலைவாணிகம்பரிடத்திருக்கத்தண்டிகையினலமாய்வாழ்ந்தா, ங்கவடான்புரம்போகக் கம்பரன்றேகூலிக்கோ ராளானுரே, செங்கையுகிரால்வேதன் சிரத்திலொன்றைத்துணித்துவிட்ட செயங்கொண்டாரே, சுங்கமாறியபோது சுண்ணும்புங்கொடுக்கார்தொல்புவியுளோரே. (௧௧)

## வாமனன் அரிச்சந்திரன் கதை.

தாப்பாய்வாமனன்கையின்மாவலிதண்ணீரைவிட்டுத்தரணிதோற்றுன், வாய்ப்பாயகோசிகன்றன்வஞ்சனையாலரிச்சந்த்ரன்மனைவிவி

ற்றன். நீப்போலெனச்சூட்டிமதனுடலையெரித்துவிட்டுசெயங்கொ
ண்டாரே.பார்ப்பார்க்குவாய்ப்போக்கொண்ணுதாண்டிக்கதுதானும்
பகரொணுதே. (கஉ)

## திருஞானசம்பந்த சுவாமிகள் கதை.

பண்ணுருங்கவுணியாவிபூதியிறைல்வழுதிசுரம்பாதிதீர்த்தா, ரெ
ண்ணுமிரஞ்சமணர்திருநீற்றைமறந்துகழுவேறிமாய்ந்தார், பெண்ணொ
ரொச்சடையில்வைத்தசெயங்கொண்டாரேயுலகிற் பெருமைசேர்ந்த,
வெண்ணரீறேவினையகற்றுந்தரிப்பவர்க்குச்சியகதியுமேவுந்தானே.

## துரியோதனன் கதை.

புள்ளாலேபொறியரவத்துசன்மடிந்தாற்றருமருக்குப்பொரும்
போருண்டோ. துள்ளாடத்திருப்பிவிட்டுப்பின்பவனைச்செயிக்கமிகத்
தொல்லையாச்சே, வெள்ளானைக்கிறைபணியுஞ்செயங்கொண்டாரே
பகையைமெலிவியாமன், முள்ளாலேயெடுப்பதைக்கோடாலியாலெடு
க்கவந்தமுறைமையாமே. (கச)

## அகலிகை கதை.

பண்டகலிகையையிந்திரன்களவாய்த்தழுவிவெளிப்படுஞ்சாலத்
தைக், கண்டுமுனிசகியாமலிருவரையுஞ்சபித்ததனுற்கனவீனந்தா,
னிண்டை புனைசடையாரேசெயங்கொண்டாரேபுவியிலில்லாள்பேச்
சைக், கொண்டவன்றூற்றும்போதேகூரையொக்கத்தூற்றுமெனக்
கூறுவாரே. (கரு)

## தாரை கதை.

கடலீன்றசந்திரனைக்குருமனைவிகலந்தணையக்கருதிவாவென்,
றிடவுமதிதொடலாமோபின்வருவதறியாமலிணங்கினனே, சடையில
ங்கக்கங்கையணிசெயங்கொண்டாரேமாரன்சரந்தாங்காம, லுடை
குலைந்தபின்புசொந்தமுறைமைகள்கொண்டாடுவரோ வுலகுளோரே.

### காந்தக்கந்கோட்டையழிந்த கதை.

சுற்றுமதிற்கலிங்கசிந்துசூழுசிக்காந்தமெனுந்துருவுந்தன்னை, யெத்தும்விலைமாதர்களாற்பண்டுகருணாகரன், வென்றிட்டானன்றோ, கைத்திகிரியோன்பணியுஞ்செயங்கொண்டாரேமிகுந்தகருத்துண்டான, புத்திமான்பலவானுமென்றுலகோர்சொல்லுவதும்பொருந்துந்தானே. (கஎ)

### தருயர் கதை.

அனைப்போல்வருமிருகந்தனக்கும்வீமனுக்கும்வழக்கானநியாய. வேலைக்காதருவுதர்மர்வீமனுடல்பாதிமிருகத்துக்கென்றார், வேழப்போர்வையைத்தரித்தசெயங்கொண்டாரேசீனிவெல்லம்போட்டு, நாழிப்பால்வார்த்தாலுநடுச்சொல்வாரறிவுமிகுநடுவுள்ளோரே. (கஅ)

### வாலிமருசனன பெடுத்த கதை.

விழியெதிர்நில்லாதொரித்துவாலியைமாலெய்துகொன்றுவிட வேவாலி, வழியுடனேமறுசனனமெடுத்தரியையெய்துபழிவாங்கினு னே, அழலுமழுவணிகரத்தார்செயங்கொண்டார்நன்னாட்டிலமரர்க் கேனும், பழிகிழமதாகிவிட்டுப்போவதில்லையென்றுலகோர்பகருவாரே.

### அம்பிகாபதி கதை.

அரசன்மகளாரையம்பிகாபதிசேர்ந்ததனை மன்னனறிந்துநாட் சென், றுருசிபிறந்தொருநாளத்தாட்சியுடனவனுயிரையொழித்தான ன்றோ, பரசணியுங்கரத்தாரேசெயங்கொண்டாரேமிகுந்தபழக்கமே னுஞ், சரசமிஞ்சிரவிக்கையிற்கைபோடவொண்ணுதென்றுலகோர்சாற்றுவாரே. (உ0)

### விபீஷணன் கதை.

கும்பகர்னனுக்கிளையோன்றமையனுயிர்நிலைகாட்டிக்கொல்லென்றேகி, கும்பலைக்குந் துறவுசொல்லியிலங்கைமன்னன்வலுவைமுற்

றங்குறைத்தானன்றோ, செம்பியனாட்டவர்புகழுந்தென்மேனாட்
டில்வளர்செயங்கொண்டாரே, தயப்பிறக்கத்துரையாமென்றிடுஞ்
சொல்லரக்கனுக்கேதகுங்கண்டமே. (உக)

## கண்ணன் மலையைக்குடையாக எடுத்த கதை.

கல்லானமாரியையிந்திரனனுப்பவாய்ப்பாடிக்கண்ணர்க்கம்பு
விலைவேதுமின்றியொருமலைக்குடையால்வந்தமழைவிலக்கினனே, செல்
லாருங்குழலிசௌந்தரியையிடப்பாகம்வைத்த செயங்கொண்டாரே
வல்லார்க்குப்பு[illegible] மாராயுதமாமென்றுலகோர[illegible] துவாரே. (உஉ)

## சூர்ப்பநகை மூக்குமுலை யறுபட்ட கதை.

உருக்குதலுநபத்தலுமார்சூர்ப்பநகையிலக்குமணனுயர்தோள்
சேரச், சுருக்கிற்சென்றெடுக்கவவனிணங்காமன்மூக்குமுலைதுணித்
தானன்றோ, மருக்கிளைந்தகரத்தாரேசெயங்கொண்டாரேமிகுந்தப
யனுண்டாகிச, சிறுக்கிமனதறியாமற்செடிதனைக்கையாற்றாக்கித்திர்
ந்துவாறே. (உ௩

## சீதை கதை.

தேன்மொழிச்சீதையையரக்கன்சிறையெடுத்துவனத்தில்வைத்த
செயலாலுந்தா, னமட்டும்பாரக்கவவள்கற்பழியாதக்கினியிலமிழ்ந்
துமீண்டாள்.மான்விழியாள்சௌந்தரிபாகாசெயங்கொண்டாரேநின்
வளஞ்சேர்நாட்டிற், றன்பதிவிரதையானற்றேவடியாள்வீட்டினித்த
ந்தரிக்கலாமே, (உ௪)

## அருச்சுனன் கதை.

பண்டுகிணற்றினிலெரிந்தபெருத்திரத்தைத்துரோணர்சிலைபா
ணம்போட்டுக், கொண்டுவரக்கண்டதனஞ்சயனுமந்தவிற்றொழில்
கைக்கொண்டானன்றோ, வண்டுவிழியுமைபாகாசெயங்கொண்டாரே

புமதுவளஞ்சேர் நாட்டில், கண்டதைக்கற்கின்றவனேபண்டிதனாவா
னென்றேகருதுவாரோ. (௨௫)

## நாகனை பாம்பு கடித்த கதை.

நன்றாகமழைவனமெரியமேற்கிடந்தபாம்பு செத்திடாமற்றூங்கி,
மண்ணில்விட்ட நளன்கரத்திலரவு கடித்தவனுடலை வடுச்செய்தாற்
போல், வெண்ணிலவைச்சடையில்வைத்தசெயங்கொண்டாரே குடி
யின்மேவிவுநீர், புண்ணியத்துக்குடுமெருதைப்பல்பிடித்துப்பார்ப்பமெ
னப்புகலுவாரோ. (௨௬)

## ஓரரசன் பெண்சாதியின் கதை.

நயமேவந்தன்பாரியொரு துன்மார்க்கனைக்கொண்டு நடந்தேயா
ற்றி, வியல்புடனே போய்ச்சலத்தினின்றதைச்சிந்தாமணியிலியம்பினு
ரோ, கயல்விழியாருமைபாகா செயங்கொண்டாரே தனதுகணவன்
போலே, அயல்வீட்டான்மகனவனுமாபத்துக்குதவானென்றுரைகு
வாரோ. (௨௭)

## சேதுபதிராசாமகன் கதை.

பெண்ணைவாழ்க்கைபடுத்தசேதுமன்னன்குறித்தவிடம்பிசகிமே
லாங், கண்ணார்பரிசோதனைக்குந்தப்பி விதிப்படிமுடவன்கைக்கொ
ண்டானே. பண்ணூலவுபுகழ்மேவுஞ்செயங்கொண்டாரேமூவர்பாரித்
தாலும், பெண்ணைதனைத்தடைத்திடலாமெழுத்ததனைத்துடைப்பவ
ர்களில்லைதானே. (௨௮)

## குஷ்டரோகியின் கதை.

பண்டுகுட்டரோகியுந்தான்பாரதங்கேட்டாரோயும் பஞ்சாயோ
டி, விண்டுவருகையிற்கதையைப்பொய்யென்றுன் மறைந்தகுட்டமீரிற்
றன்றோ, தண்டமிழுக்கருள்புரியுஞ்செயங்கொண்டாரேபூதந்தழும்பா
தீசன், உண்டென்றபேருக்குண்டில்லையென்றபேற்கில்லையுண்மைதா
னே. (௨௯)

### மனுநீதிச்சோழன் கதை.

முன்னொருசோழன்புதல்வன்றேர்க்காலிலான்கன்று முறியக்கண்டே, பின்னதற்கீடாய்த்தனதுபிள்ளையைத்தேர்க்காலிலிட்டுப்பெருமைசேர்ந்தான். றென்னேமநகரில்வாழ் சௌந்தரநாயகிமகிழ்ந்தசெயங்கொண்டாரே, தன்னுயிர்போன்மன்னுயிரை யெண்ணுவர்தேவர்முனிவர்நமக்கொப்பாரே. (௩௦)

### இந்திரசித்தன்கதை.

கண்ணார்படைதனைச்செயிக்கவிந்த்ரசித்தனிகும்பலையைக்கருதிச்செய்தே, நண்ணியயாகமுமுடியுந்தருணத்தி லிலக்குமணனுசஞ்செய்தான், மண்ணையுண்டோன்விழிபதத்தார்செயங்கொண்டாரேகோலமத்தூடாடி, வெண்ணெய்பம்வேளையிலேதாழியுடைந்திடுதன்முன்செய்வினையென்பாரே. (௩௧)

### இராவணன் கதை.

அற்புதராமன்கைவலுமுதனுட்சண்டையிலரக்கனறிந்தும்புத்தி, செற்பமகோதரன் பேச்சைக்கேட்டலவோகுலத்தோடுந் துஞ்சினனே, தற்பரசதாசிவனேசெயங்கொண்டாரேநல்யோசனையில்லாத, தற்புத்திமந்திரியாலரசுக்கேயீனமென்றசொல்மெய்தானே. (௩௨)

### சகரர்கதை.

ஆவலாய்ப்பரிதேடிக் கபிலரிஷியிடத்திற்போ யகம்பாராட்டித், தாவியவெஞ்சினத்தாலே யறுபதினாயிரம்பேர்கள சகரர்மாண்டார். காவடருந்தென்னேமச் செயங்கொண்டாரேபொறுமை கருதிச்செய்யாக்,கோபமேபெரும்பாவமதுசண்டாளம்மெனவுங்கூறுவாரோ.

### இராக்கதர்கதை.

ஆற்றையணிதேநோக்கி யொருகிருதன்றவசுசெய்ய வவனுக்கோர்வாள்கூற்றையுதைத்தோனனுப்பக்குறுக்கிற்சென்றிலக்குமணன்கொ

ண்டானன்றோ, நாற்றிசையும்பணியவருஞ்செயங்கொண்டாரேயணி ந்தநாளாயொட்டிக், காத்திருந்தோன்பெண்டுதனைநேற்றுவந்தோன் கைக்கொண்டகணக்குத்தானே. (௬)

## பாரதக்கதை.

விதுரன்வின்முரித்தான்கன்னனும்பாழ்புக்கணைதிரும்பவிட்டா னில்லை, யெதிரிபடைதனைத்துரியோதனன்செயிக்கப்படைத்தலை ரிணங்கினரோ, மதுரையிலிந்தனம்வளையல்விற்றசெயங்கொண்டாரோ மருவார்போரில், குதிரைநடவாவிடின்மாவீரர்பறந்திடுவாரோகொக் காய்த்தாமே.

## மணியடித்த கதை.

சாத்திரவேதியர்வதிட்டர்தருமராதுசத்திரத்திற்சலச்சோறுண்ட, மாத்திரமேலட்சமறையோர் புசித்தாலாடுமணிமலிந்தாடிற்றே, நேத் திரத்தாலனங்கனுடறனையெரித்தசெயங்கொண்டார்நிமலர்நாட்டிற் பாத்திரத்தையறிந்துபிச்சையிட வேண்டுமென்றுலகோர்பகருவாரோ.

## கிருட்டினன் தருமரைப் பொய்சொல்வித்த கதை.

அன்பானதருமராசுவத்தாமாவெனும்யானைபமரில்வீழ, வன்பான புயவசுவத்தாமர்பட்டாரெனப் பிசகிவழுத்தலாச்சே, முன்பாதவன் னெயிற்றைப்பறித்தெறிந்தசெயங்கொண்டார்முதல்வர்நாட்டிற்.றன் பானைதனைச்சாயப்பிடிப்பதுண்டோவெவருமென்றுசாற்றுவாரோ. ()

## பஞ்சபாண்டவர்கள் போர்க்குச்சென்ற கதை.

மன்னர்துரோணரையோனன்கொடுபோயிற்றென்றொருசொ ல்வழுத்தக்கேட்டே,பொன்னிரதமேறியம்புவில்லெடுத்தைவருஞ்சம ர்க்குப்போனாரன்றோ, நன்னயவேதன்சிரத்திலொன்றுதுணித்திட்ட செயங்கொண்டார்நாட்டிற், சின்னபாம்பானாலும் பெரியகம்பாலடி யென்றேசெப்புவாரோ. (௮௩)

## அச்சுதவாணன் கதை

வேண்டியரனைப்பணியு மச்சுதவாணக்குரிசில் வெள்ளாண்மைச் சீர், ஆணியவல்லமையான்மூவேந்தரையுங்காவலில்வைத் தவதிசெய் தான், பாணிமமுவணிசெயங்கொண்டாரேயெத்தொழில்களுக்கும் பழுதண்டேபார்.காணியைநட்டுக்களத்தினிற்பதுவேநன்மையெனக் கருதுவாரே. (௩௯)

## தக்கன் கதை.

கயிலைத்தானுமைப்போலே மறுசிவனையுண்டுபெண்ணைக் கருதித் தக்கன், செயலற்றேசெய்வேள்வியுங்குலைந்துவேற்றுமுகஞ்சேர்ந்தா னன்றோ, வயிலைப்போல்விழியுமைசேர்செயங்கொண்டாரேயிந்தவவ னிமேலே, உயரத்தான்பறந்தாலுமூர்க்குருவிபருந்தாகாதுண்மைதானே. (௪0)

## தக்கன்மகத்தில் வந்த தேவர்கள் கதை.

ஆணவத்தக்கன்மகத்திலவியுணவந்திடுதேவரவர்களெல்லா, நாணமொடுமானபங்கமுற்றனரே வீரபத்திரநாதராலே பாணிதனின்ம முவணிந்தசெயங்கொண்டாரேருசியும்பசியும்பார்க்கு, மூணருந்தங்க ருமமிழந்திடுவரென்றபழமொழிதானுண்மைதானே. (௪௧)

## இந்திரன் நளனைத் தூதுவிட்ட கதை.

வனத்திறையிந்திரனளன்பாற்சென்றுனக்குவருமானமாதைத்தா னென், றனக்குவரும்படிபேசித்தமயந்திதனையிணக்கித்தாவென்றுற் போற்,சினக்குமரவணிந்தடியார்மனக்கவலைதீர்த்தருளுஞ்செயங்கொ ண்டாரே, உனக்குமழைபெய்யுமிப்போதெனக் கிரவைநீர்தாவென்று ரைத்தவாறே. (௪௨)

## பிரமனைச் சிவன்சபித்த கதை.

கஞ்சனுக்குப்புவியிற்கோயிலுட்பூசையில்லையெனக்கடிந்தீர்மீட் டுந, கெஞ்சினபின்மறையவர் செய்பூசையெல்லா முனக்கெனவே

பைசெய்தீர், பஞ்சவனுக்காய்மாறிநடித்துச்செயங்கொண்டாரேபகை
வரைத்தா, னஞ்சிநல்லவார்த்தைசொன்னுநபொல்லாப்புவருவதில்
லையவனியோர்க்கே. (சங)

## அகலிகை சாபந்தீர்ந்த கதை.

முனியகலிகைகல்லாய்ச்சபித்துநிவிர்த்திக்கும்வழிமுறைசொன்
னூர்போன். மனுவேந்தனுகியரிநடந்திடுந்தாட்படப்பழையவடிவானு
ளே, தனவானைத்தோழனென்றசெயங்கொண்டாரேயெவர்க்குந்த
லைநாள்செய்த, வனுபோகந்தொலைந்திடும்போதவிழ்தமுஞ்சித்திக்கு
மென்பரவனியோரே. (சச)

## விபீடணன் மகுடப்பெற்ற கதை.

வளமையுள்ளராமனை விபீஷணன்சேர்ந்திலங்கைமணி மகுடம்
பெற்றுன், தளரரக்கருடனிருந்தமர்க்குவந்தாலவனையொக்கச் சரிப்
பாரன்றே, களபமணிதனத்திசௌந்தரிபாகர்செயங்கொண்டார்க
னத்தநாட்டி, னிழலருமை வெய்யிலிற்போனூற்றெரியுமென்பதுவுஞ்ச
ங்கண்டீரே. (சரு)

## அரிச்சந்திரன் கதை.

செப்புமரிச்சந்திரன்முனிசனுக்கேவிலையாகிச்சென்றே நெஞ்ச,
மொப்பிமயானமுங்காத்த நிமித்தியத்தாலிழுக்கவனுக் கொருபோது
ண்டோ, மைப்படியுங்கண்ணிசௌந்தரிபாகர்செயங்கொண்டார்வள
ஞ்சேர்நாட்டிற், குப்பையிலேகிடந்தாலுங்குன்றிமணிநிறத்திலொன்
றுங்குறைவுறுதே. (சசு)

## அமராவதி யென்பவள் கதை.

வணக்கமுடன்சித்திரபுத்திரனையமராவதிதான்வணங்கிப்போங்
க, லிணக்கமுடன்செய்யாதநியமத்தாலவட்குமெய்த்திட ரெய்திற்றே.
யணைக்கடலின்மேனடந்தமுகில்பணியுஞ்செயங்கொண்டா ரருள்சே

ர்நாட்டிற், கணக்கனுக்குக்கைக்கூலி கட்டியன்றோ குடியிருக்கக்கட
னென்பாரோ. (சஎ)

## விடத்திற்குப் பயந்த விஷ்ணு கதை.

கடியவிடம்பாற்கடலிற்றோன்றியபோதருகிருந்த காகுத்தன்றா
னெடியபயத்துடனீங்கியுங்கருநிறம்படைத்தானிசமதன்றோ, கொடி
யிடைப்பெண்சௌந்தரிவாளிடப்பாகர் செயங்கொண்டார் குலவுநா
ட்டிற், படைத்தனக்கோடிப்பிழைப்பர்பஞ்சமத்திற்கிருந்துபிழைப்பரெ
ன்பாரோ. (சஅ)

## பஞ்சதந்திரக் கதை.

திறமுளசஞ்சீவகனைத் தமரகன்கண்டழைத்துவந்து சிங்கத்துக்
கு, மிறையுளமந்திரியாகவைத்தபின்சிங்கந்தனக்கு விடபத்துக்கும்; கு
றைவில்பகையுண்டுபண்ணிவிட்டதன்றோ செயங்கொண்டார் குலவு
நாட்டி, லுறவுதனைப்போலிருந்தாங் குளவினைப்போற்கொட்டுவர்களு
ண்டென்பாரோ. (சகூ)

## அறிவீன னரசர்மேற்பாடிய கதை.

அறம்பெற்றசோழனைமண்ணுண்ணிமரப்பாவையென்றறிவிலோர்
பாட்டாய், வெறும்பித்தன்சொல்லவந்தமெய்ந்தர்சபையோர்கள்பொரு
ள்விளங்கச்சொன்னார், திறம்பெற்றபரிசுகொண்டான்றென்னைமநக
ரில்வளர்செயங்கொண்டாரோ, வெறும்புக்குந்தன்கையாலெண்சாண்
மெய்யென்றுலகோரியம்பினரோ. (ரு0)

## கர்னாடகாராசன் கிண்ணங்கொடுத்த கதை.

வாழிரவிசுதன் லலக்கையாலெடுத்துக்கொடுக்குமுன்னேமனம்
வேறுமென், றேழைமறையோர்க்கிடக்கையாலேயெண்ணெய்க்கிண்
ணமீந்தானன்றோ, வாழிதனிற்பள்ளிகொள்ளுமால்பணியும்பொற்பா

தச்செயங்கொண்டாரோ, நாளையென்பார்,கொடைதனக்குச் சடுதியிலேயில்லையென்றனலமதாமே. (௫௧)

## விசுவாமித்திரன் வெற்றியடையாத கதை.

புகழரிச்சந்திரனிசவானெனவசிஷ்டர்சொலவவனைப் பொய்யனாக்க, மிகவெகுண்டுசபதமிட்டேயானமட்டும்பார்த்தயர்ந்துவிசுவாமித்திரன், செகமறியமக்கனப்பட்டிருந்ததையாவருமறிவார்செயங்கொண்டாரோ, முகடுமுட்டவருங்கோபந்தரும்புகுத்தவேலையென மொழிந்தவாறே. (௫௨)

## சுப்பிரமணியர் கதை.

அண்ணலருள்சரவணவேள்புனக்குறப்பெண்வெயிலினிற்குமயவதிபார்த்துத், தண்ணுலவுவேங்கைமரநிழலாவன்றவள்வருத்தந்தனைத்தீர்த்தாரோ, விண்ணவர்க்காய்விடத்தையுண்டசெயங்கொண்டாரோகனந்தான்விளங்குநாட்டிற், பெண்ணொன்றேற்பேயுமொக்கவிரங்குமெனவுலகுள்ளோர்பேசுவாரே. (௫௩)

## கிருட்டினன் ஐவரைக்காத்த கதை.

வள்ளல்கன்னன்கைநாகக்கணைப்புலன்மாலறிந்தவன்றன் மாதாவைப்போய்ப், பிள்ளைகண்மேலேகமொருதரம்விடப்பாணிறுத்தெனவும்பேசச்சொல்லித், தெள்ளியபஞ்சவருயிரைக்காத்தார்தென்னேமநகர்ச் செயங்கொண்டாரோ, வெள்ளம்வருமுன் னணையைக்கோலிவைப்போர்காரியஞ்சண்டிகரென்றுமே. (௫௪)

## இரணியன் கதை.

ஆச்சரியவிரணியனட்டாக்கரத்தையிகழ்ந்தார் பொல்லாப்பெண்ணுமர், கூச்சமறத்தள்ளியிரணியாயநமாவென்றதிறைற் குலந்தான்றேகம், பேச்சிமுலையுண்டமுகில்பணிசெயங்கொண்டாரோநீள்பெருங்காற்றாற்று, நீச்சறியாமைந்தனைவெள்ளங்கொண்டுபோமென்றனிசங்கண்டோ. (௫௫)

## உருக்குமாங்கதன் கதை.

மன்னிலதிலுருக்குமாங்கதராசனொருவிரதநடாத்தினொனெ
றன்னகருமவ்விரதந்தொடங்கியதால் யமனவனையணுகக்கூடா [ன
தென்னயமதண்டனைசேராதிருந்தாசெயங்கொண்டாரில் குநாட்டு
மன்னவனெட்படியோமன் னுயிருமந்தப்படியெனவுமவழூத்துவாரே.

## நளன் கதை.

அடவிசென்றுநகரிழந்துவறுமைதங்கியுடன்மெலிசேதயம்மாறா
ர்வந், திடவுமம்மானைவலிஞலைச்சரழைத்திடவருவதிலேபோவெ
ன்ற, திடநளனைமாமனதிரிகொண்டழைக்கச்சம்மதித்தான்செய
கொண்டாரே, கடுகுசிறந்தாலுமென்னகாரமபோகாதெனவுங்கழறு
வாரே. (ரு௬)

## சூரபத்மன் கதை.

பூதலமும்பொன்னுலகுமேவல்கொண்டசூரனரனபுதல்வறகஞ்சிச,
சூதமரமாயொளித்துக்கடைசியிற்செவ வேள்கரத்திற்றுசமானே,
தாதவிழ்பூங்கொன்றையணிசெயங்கொண்டாரேசெடியைத்தாணை
த்தாவிக், காதமோடினுமுயற்குக்கைதூக்கென்றுலகிலுள்ளோர்கழறு
வாரே. (ரு௮)

## பொய்த்தவ வொழுக்கத்தோர் கதை.

பூமிதனிற்சிலர்நீரிட்டிருகரமுங்குவித்திருகண்பொத்திக்கொண
டே, காமியர்கண்மேற்பொருண்மேன்மனங்கிடக்கவாயிலரகரவென
றுற்போ, னெமியணிவோன்றேடவரியபதச்செயங்கொண்டாரிம
லர்நாட்டின், மாமிதலைமேற்கையும்வேலிபுறத்தினிற்கண்ணும்வைத
தவாறே. (ரு௯)

## திருவிளையாடற் புராணக் கதை.

பெண்ணிறக்கத்தெங்கலம்பால்வில்வேடனடுத்துவரப்பெண்ணு
க்காளன், கொண்ணதுரீயென்றிழுக்கமதுரையிறசுந்தரர்கியாயய

கொடுத்துத்தீர்த்தா, ரண்ணலானேசெயங்கொண்டாரேகாதாரக் கேட்டதும்பொய்யாகுங், கண்ணாரக்கண்டதும்பொய்தீர்க்கவிசாரிப் பதுமெய்காணுந்தானே. (சுO)

## துரியோதன னரசிழந்த கதை.

கூறுமரவக்கொடியோன்பாண்டவருக்கைந்திலமுங்கொடுக்கேனென் று, வீறுசொன்னான் சுடக்கொடுத்தபின்னுயிரோடுலகமுற்றும்விட் டானன்றோ, நீறணிமெய்ச்செயங்கொண்டாரேயாற்றோடேமூடர் நேர்போனாலும், போறதல்லாலோடக்காரனுக்கரைக்காசுங்கொடுக்க ப்பொருந்திடாரே. (சுக)

## விநாயகர் மாங்கனி பெற்ற கதை.

வேய்க்குமகன்மூத்தபிள்ளைகரத்தினின்மாங்கனிகொடுக்கவெ குண்டுவேலர், வாய்க்கினியகனிநமக்குத்தரவிலென்றுகோபமுடன் மலைமேற்சென்றார், பாக்கியஞ்செந்தமிழ்க்குதவுஞ்செயங்கொண்டா ரேவிரைத்தபழனந்தோறுந், தாய்க்குவிளைந்தாலுமென்னதனக்குவி ளைந்திடவேண்டித்தவஞ்செய்வாரே. (சுஉ)

## சீவகன் கதை.

பெலமுற்றசிங்கமொருகன்றீனும்படியெழுதிப்பின்னேசெம்பொன் விலைபெற்றகரியையரிக்கன்றுதுள்ளிப்பாய்ந்தகதைமெய்யாமென்றே சிலைபெற்றகூளேந்த்ரன்விறலிதனில்விளங்குதன்றேசெயங்கொண் டாரே, குலவித்தைகல்லாமற்பாதிவருமென்றுலகோர்கூறுவாரே. ()

## கோக்குமீன்களை மடித்துத் தானும்மடிந்த கதை.

தண்ணார்மீன்களைச்சருவசிவதயாபரபகத்தான்றயவாய்ப்பேசி, யெண் ணமற்சிதைத்தபழிதனக்கலவன்பகக்கழுத்தையிடறிற்றன்றே, பண் ணார்சிந்தாமணியில்விழுந்ததஃறேசெயங்கொண்டார்பரவுகாட்டிற்,

கொண்ணுரைக்கொல்லுமல்லாற் கொலைவிடாதென் றுலகோர்கூறு
வரோ. (௬௪)

### வாமனுவதாரக் கதை.

உலகமெல்லாமுடல்சிறுத்துஞ்சிரியவாமனனளந்தானொருபாதத்
தா, லலகையின்காத்திரங்களென்னவாலகிருஷ்ணன்பாலருந்தியவ
னோமாய்த்தான், சிலைநுதலாள்சௌந்தரிநாயகியிடப்பாகம்வைத்த
செயங்கொண்டாரே, மலைபெரிதானாலுமென்னசிற்றுளிக்குப்பயந்
சனிக்கும்வண்மைதானே. (௬௫)

### புட்கரன் நளனைவரவழைத்த கதை.

காவலன்புட்கரனளனைச்சூதாடவரவழைத்தகபடங்கண்டே, மே
வியசூதாடாமற்றள்ளிவிட்டாற்சனிநளனைவினைசெய்வானோ, வாவிதி
கழ்தென்னைமச்செயங்கொண்டாரேமிகுந்தவளஞ்சேர்நாட்டி, ஞவி
தன்செய்தியையறிந்துகுடிமியைப்பத்திரப்படுத்தனலமென்பாரே.

### துமுண ராசன் கதை.

சிம்மாசனன்குமுணன்சிரம்போலேவிழிமூக்குச்செவிவாய்செ
ய்து, சம்மாரம்பண்ணிரத்தச்சோரிசிந்தக்கொடுத்ததுவுந்தட்டானன்
றோ, பெம்மானேதென்னைமச்செயங்கொண்டாரேமலையைப்பிர
ட்டுங்கையான், கம்மாளன்பசுவைத்தான்காதறுத்துக்கொள்ளுமென
க்கழறுவாரே. (௬௭)

### ஆமை வாயாற் கெட்ட கதை.

கொடியையிரண்டோதிமங்கௌவிப்பறக்கநடுக்கூர்மங்குலவிச்
செல்கா, னொடியிலொருசெய்திசொலவாய்திறந்தாமையும்வீழ்ந்து
நுறுங்கிற்றன்றே, வடிவுளதந்திரக்கதையுமுண்டுசெயங்கொண்டார்
வாழ்வளஞ்சேர்நாட்டி, னெடுங்கிணறும்வாயாலேதூறுமென்றேசொ
ல்லுவர்கணிசங்கண்டீரே. (௬௮)

## திரிச்சங்குராசன் கதை.

நம்புகுருவஷிஷ்ட்டர்பகைமிகுந்திருக்கும்போதுதிரிச்சங்குராசன்
வம்புரைத்தகோசிகராற்சொர்க்கமதிலேறியதான்மகிமையுண்டோ
சம்புமகாதேவசெயங்கொண்டாரோயெதிராளிதனுவாவெய்த
வம்புவிழுக்கையிலிழைகட்டினான்மெய்யினிற்புண்ணுறிடாதே. (௬௯)

## சுக்கிரன் கண்ணிழந்த கதை.

கூச்சமறமாவலிபூமியைக்கொடுக்கமால்வாங்கக்குறுக்கேசுக்ரன்,
பேச்சறியாமற்பேசிக்கண்ணிழப்பானேனொதுங்கிப் பிழைக்கொண்
ணாதோ, வாச்சரியஞ்செயங்கொண்டாரோயிலங்காபுரிராமராண்டா
லென்ன, வேச்சிலரக்கர்களாண்டாலென்னென்றுகுரங்கனாளிருந்
ததன்றே. (௭௰)

## மானமுள்ள மகாபுருடன் கதை.

நீரெந்தோர்கலசமதிற்சவசமுஞ்செய்தொருவன்வந்தானெடுநா
ள்கும்பம், பாரில்விழுந்துடையவின்னுமொருகலசமென்மானம்பார்க்
கும்போது, சீரலவென்றழுதானென்றொருகதைசொல்வார்நேமச்செ
யங்கொண்டாரே, யாரெனினுமானமிழந்துயிர்காப்பதென்னவென்
பாரவனியோரே. (௭௧)

## கருடன் கதை.

விருப்பமறையோன்றனக்குப்பிறந்தசிறுதனையவணன்விழுங்கும்
வாயி, னெருப்பெழச்சுட்டதனாற்செங்கருடனிருதனைவிடுத்தானென
வோர்பாட்டிற், றிருப்பதிவேங்கடசதகந்தனிலுரைத்தார்முன்பெரி
யோர்செயங்கொண்டாரே, நெருப்பிருப்பதறியாமற்றொட்டாலுஞ்
சுடுமெனவேநிகழ்த்துவாரே. (௭௨)

## பட்டணத்துப் பிள்ளை கதை.

கையினிற்பட்டணத்தார்க்குத்தமக்கைநஞ்சுகலந்துபலகாரஞ்செ
ய்தே, மையமறக்கொல்லவென்றேகொடுக்கவவண்மனைநெருப்பால

ழிந்ததன்றே, தூய்யபினாகச்சிலையீர்செயங்கொண்டாரேபிறர்க்குத்
துன்பங்காணச், செய்ாதீவினைதானுஞ்செய்தவர்க்கேசேருமெனச்
செப்புவாரே. (எ௩)

## விக்ரமாதித்தன் கதை.

சிந்தைமகிழ்விக்ரமாதித்தனுக்காயிரவருடந்தேவியீந்தாள், புந்திவ
லுமந்திரிசொல்லாலிரண்டாயிரவருடம்புவியையாண்டான், சுந்தரர்
க்குத்தூதுசென்றசெயங்கொண்டாரேதருமந்துலங்குநாட்டின், மந்
திரங்கால்மதிமுக்காலென்றுலகந்தனிலுள்ளோர்வழுத்துவாரே. ()

## காளிதாசன் கதை.

நிசகாளிதாசனரண்மனைவாயிற்புகவேண்டிநிருபன்கீர்த்தி, சுகநா
சிபல்போலென்றுரைத்ததனாற்செல்லவிட்டார்தோன்றப்போவென்,
றிசைவாங்கீர்வாணப்போசன்றன்மேற்பகர்ந்தனன்காண்செயங்கொ
ண்டாரே, பசுமாட்டுத்தோலதனைப்புலிபோர்த்துக்கொண்டிருந்தப
ண்புதானே. (எ௫)

## இராவணன் போர்க்குத்துணிந்த கதை.

யாகத்தாற்செயமுமில்லையிறப்பதினிநிசமெனக்கொள்ளெனப்
பெண்ணே, லோகத்தாரிராமனெனவுரைக்குமட்டுமிராவணனென்
றுரைப்பார்போர்க்குப்,போகத்தான்றுணிந்தனென்றுனரக்கனதாற்
செயங்கொண்டார்பொருந்துநாட்டிற், சாகத்தான்றுணிந்தவர்க்குச்
சமுத்ரமுழங்காலளவுதானென்பாரே. (எ௬)

## நக்கீரர் கதை.

அத்தநீகரத்தெழுதியடிமைக்கீந்திட்டசெய்யுளதனைநோக்கிச்,
சற்றுந்தாமதியாமலியற்கைமணங்கூந்தலுக்குத்தகுதியென்றல், குற்
றமெனப்பயமின்றியுரைத்தனர்நக்கீரர்செயங்கொண்டாரேசொல்,வி
த்துவான்மதயானையிரண்டுமொப்பென்றுரைப்பதுவுமெய்யதாமே.

## துரோணர்பெண்சாதி.

உச்சிதமாய்த்துரோணர்சொன்னமொழிப்படியேயவர்மனையாளு டையில்லாமற், பிச்சையிடக்கொள்சிவனுக்கக்கணமேயிந்திரியம்பிற ந்ததன்றே, தெட்சணமாமுனிபரவுந்தென்னைமாநகரில்வளர்செயங் கொண்டாரே,யிச்சையுள்ளகாமுகர்க்குக்கண்கண்டவிடத்தினிலெனை றியம்புவாரோ, (எஅ)

## வாதாபி கதை.

மெத்தநாள்வாதாபிவேதியர்களுயிரையுண்டுமேவிக்கும்ப, சித் தனைச்சாப்பிடநினைந்தான்சித்தனவனுயிரைமுற்றுஞ்சிதைத்துப்போ ட்டான், மத்தகசந்தனையுரித்தசெயங்கொண்டாரேயார்க்குமனதுக் கேற்க, நித்தியங்கட்டப்பாலைமுற்றவுந்தான்பழுத்திடுமோநிலத்து மீதே. (எ௯)

## நாரைமுந்துவமைசொல்லிய கதை.

பார்புகழும்பாண்டியர்க்குச்சங்கத்தார்பேரறிவாற்பகரவொண்ணு,நா ரைமூக்குக்குவமைபனங்கிழங்கென்றொருபுலவனவின்றானன்றே , சீருலவுங்கங்கைதிங்களரவமொடுகொன்றையணி செயங்கொண்டா ரோ, காருலவும்புவியிலுள்ளோராகாயந்தனையும்வரைகட்டுவாரோ. ()

## விறன்மிண்டநாயனார் கதை.

ஆருரொல்லையின்மிதியேனென்றவிறன்மிண்டர்தனையரன்சோ தித்தப், பாரிலொருகான்மிதிக்கச்செய்ததுகண்டக்காலைப்பதறியீர் த்த, சீருவஞ்சிவன்காட்சிகொடுத்தானன்றேசேமச்செயங்கொண் டாரோ, பேருலகின்மனங்கலங்கிப்பிரியாமற்பிடித்தவர்க்குப்பேறு ண்டாமே. (அக)

## செந்நாப்புலவர் கதை.

உற்றசெந்நாப்புலவர்மிக்ககணிகனன்மேற்கோபமதாயுலகு ண்டோனை, யிற்றையாம்புறப்படுவோமினியுன்பாய்சுருட்டியெழுந்

திருமென்றோதச், சித்தசன்றன்றுதைவரதப்பெருமாளெழுந்தனரோ
செயங்கொண்டாரோ, பத்தருளத்தினிலீசன் குடியிருப்பானெனச்
சொலலும் பண்புதானே. (அஉ)

## தூசலன் கதை.

மிகப்பெரியமாலசுவந்தனைப்பிடித்துக்கட்டிவந்தவினைப்போர்த
ன்னைப், பகற்பொழுதிற்பொடியாக்கித்தாதைதனைவென்றருசன்ப
ண்புபாரீர், செகத்தரசர்புகழவருக்தென்னேமகாடதிபச்செயங்கொ
ண்டாரோ, தகப்பனுக்குருபாக்கெனவும்பிள்ளையொருதோப்பெனவுஞ்
சாற்றுவாரோ. (அந)

## இரேணுகாதேவி கதை

தன்பரசுராமனதுதாயுடலிற்பறைச்சிதலைதரித்தமின்னு, ணை
ண்பரிடங்கொண்டுவரவிவண்முழுதும்பறைச்சியெனநகைத்து நாத
ன், றிண்புயனேயிவளேயப்பாற்றுரத்தெனச்சேய்க்குரைத்தனரோ செ
யங்கொண்டாரோ, பண்புளவெண்சாணுடம்பிற்சிரசுபிரதானமென
ப்பகருவாரோ. (அச)

## கண்ணன் கதை.

பார்த்தனுக்கேரதமூர்ந்தோன்மூத்தபலபத்திரனைப்பாரைச்சுற்
றென், றேய்த்தனுப்பித்தன்னைச்சார்ந்தோரைரட்சித்தண்ணனைச்
சார்ந்திருந்துவாழ்ந்த, னூற்றுவரைமடியவுஞ்செய்தான்செயங்கொ
ண்டாரோநீர்நுவலக்கேண்மோ, மூத்ததுவேமோழையென்றமிளை
யதுவேகாளையென்றுமொழிகுவாரோ. (அரு)

## நிரம்பவழகியர் கதை.

பொன்னூர்செல்வமூர்தமிழும்பொருந்தரசன்றருக்கதனூற்புல
வருக்குண், மன்னுனதிரம்பவழகியனையண்டங்காக்கையெனவழுத்
தக்கேட்டே, யன்னூர்நீயேயண்டங்காக்கையென்றூர்செயங்கொண்
டாரணிகொணுட்டிற், றன்னூலேதான்மெலிந்தாலண்ணுவியென்ன
செய்வான்றரணிமீதே. (அசு)

## நந்திராசன்கதை.

சூத்திரப்பாவையைநிகர்மெய்யிதனைநம்பொண்ணுதெனவுந்து
ணைவன்கல்விக், காத்துமதத்தஞ்செய்துலகுள்ளமட்டும்புகழ்படைத்
தானன்றோநந்தி, போற்றியசுந்தரர்க்காய்முன்முறிகாட்டுஞ்செயங்
கொண்டார்புனிதநாட்டிற், கீர்த்தியபகீர்த்தியிவைவந்தாற்போகா
வெனவேவிளத்துவாரோ. (௮௭)

## சுவாகாள் கதை.

ஆறுரிஷிபத்தினிமார்பழுதுபடாதிருக்கையிலேயன்றேருபங்,
கூறுசுவாகாவெளடுத்தக்கினிதேவைத்தழுவரிஷிக்கூட்டங்கூடிச், சீறி
யறுவரைத்தூரத்தத்தவசுக்கேகினரன்றோசெயங்கொண்டாரோ, வா
றவிதிவந்ததென்றால்வளைந்தாடும்பானையென்றுவழுத்துவாரோ. ( )

## அருந்ததி கதை.

நித்தியசந்யாசியென்றுநித்யோபவாசியென்றும்ரிஷிகள்கூற, வ
த்தைமெய்யென்றருந்ததியாள்கங்கை தனக்குரைத்துவழியன்பாய்க்
கேட்கச், சித்தமகிழருந்ததிசொற்றனக்குவழிகங்கைவிட்டாள்செய
ங்கொண்டாரோ, பத்தினியுத்தமிவாக்குப்பலிக்குமெனத்தேவரோக்
கப்பணித்திட்டாரோ. (௮௯

## மிருகண்டர் கதை.

மதிமெதுவாலொருநூறுவயன்மதியாற்பதினாறுவயதுபுத்ர,
னெதுதருவோமெனச்சிவனே கல்லபிள்ளைவயதீரொட்டிருந்தாற்போ
து, மதுதருவீரொன்றுமிருகண்டுமுனியன்றுரைத்தார்செயங்கொண்
டாரோ, யிதசாணியொருகூடைமிக்கசவ்வாதோர்பணத்தினிடையெ
ன்பாரோ. (௯0)

## அனுமான்கதை.

சலியாமற்கடற்றாண்டிமருத்துமலைகொணரனுமான்றடந்தோட
ன்னை, கலியாமலிந்த்ரசித்தன்பாசத்தாற்கட்டிவிட்டானலமதான,
க்லியாணமுரசொலிக்குந் தென்னைமச்செயங்கொண்டார்கனத்த
நாட்டில், வலியார்க்குவலியாருமிருப்பரொன்றேயுலகிலுள்ளோர்வச
னிப்பாரோ. (௯௧)

## பாண்டியராசன்கதை.

மதுரைமன்னனிடத்திருந்தருதினைபற்றுதெனவிலக்குமாவ
னேக, மிதமுடன்சேகரித்தநிமித்தியத்தான்முன்பாரிமுழுதுமிழந்தா
னன்றோ, நிதியினைத்தோழமைமேவேண்டுஞ்செயங்கொண்டாரோவேரி
நிறைக்கவேண்டிப், புதியவெள்ளம்வரப்போய்முன்னிருந்தவெள்ளந்
தையுமிழுத்துப்போனவாறே. (௩௨)

## விறகுதலையன்மனையாள்கதை.

தெகிட்டாக்காதலைவிறகுதலையன்மனையாள்கூடத்தன்றிகிலிட்
டேங்கப், புகட்டியல்லோகற்பழியாமற்கவிகேட்டாடனதுபுருடன்
பேரின், முகட்டாலிலையிற்றுயில்வோன்பணிசெயங்கொண்டாரோ சீர்
முதிர்ந்தநாட்டிற், பகட்டாறபங்கெடுப்பனெனப்பொரியரிசியிடியெ
னவும்பகருவாரோ. (௩௩)

## சூரியனைச்சக்கரத்தால்மறைத்ததை.

வாணிமாதுலன்றேமுனிறவாமற்காக்கவொன்னவகைசெய்வோ
மென், றுணியிரவியைத்திகிரியான்மறைத்துப்பார்த்தனைக்காத்தரு
ளினனோ, நாணரவாம்பொன்மலையைவளைத்தசெயங்கொண்டார்வாழ்
நலஞ்சேர்நாட்டில், வேணுமென்றுநூற்றுன்மெல்லியநூலாய்நூற்றி
டுவர்மெய்யதாமே. (௩௪)

## மயிலிராவணன்கதை.

அச்சமில்லாத்துராக்கசராவணனைமயிலிராவணன்சேர்ந்துழி
ந்துபோனான், பட்சமுள்ளவிபீஷணன்றானாக்கனைவிட்டொதுங்கி
மிகப்பண்பாய்வாழ்ந்தான், கச்சணியுந்தனத்திசௌந்தரிபாகர்செய
ங்கொண்டார்கனத்தநாட்டிற், றுர்ச்சனனைக்கண்டவுடன்றூரப்போ
வென்றுலகோர்சொல்லுவாரோ. (௩௫)

## வரகுணசோழன்மனையாள்கதை.

வல்லவரகுணசோழன்மகளைமணஞ்செய்தருளிவடிவைப்பார்த்தே,
யல்லிருக்குங்குழலியிவன்மருதப்பர்க்காவனமக்கன்னையேயென்றே, நி
ல்லைமன்றுளாடிமெய்யிலைக்கியமாம்படிசேர்த்தான்செயங் கொண்டா
ரோ, நல்லதுகண்டானுயன்றனக்கென்றேயுலகிலுள்ளோர்நவிலுவாரே

## நக்கீரர்கதை,

அரசிலையிற்பாதிபட்சிபாதிமச்சமானவிந்தையனைத்தும்பார்த்து, விரவுளநிட்டையைமறந்தநக்கீரர்தனைப்பூதம்விழுங்கத்தாக்கித், திரண்மலையிலடைக்கவள்ளிகணவனன்றேவிலக்கிவிட்டான்செயங்கொண்டாரோ, யுரைசெய்தவமறந்தார்க்கைதவமாளுமென்றௌவையுரைத்தவாறே. (௯௭)

## வேடன்கதை.

அடவியில்வேதியற்கொருவேடன்றினைமாப்பகுந்தபலனுற்கா யிக்குத், திடமுளமன்னவன்சேயாய்த்தினையரியப்பொற்கலத்திற் செனித்தானன்றே, வடவரையைச்சிலையாகவளைத்தசெயங்கொண் டாரோவையந்தன்னி, லிடுவதுபிச்சைபின்புபெறுவதுவேமோட்ச மெனவியம்புவாரே. (௯௮)

## துர்வாசமுனிகதை.

வாச்சுதெனத்துர்வாசருக்குமாங்கதனைரெத்நவருத்தவாழி,பா ய்ச்சலினான்முனியை வெல்லவரவுருக்குமாங்கதன்றான்பரித்தானன் றே, கூச்சமறச்சிலர்திப்பூச்சியைக்கதிசேர்த்திட்டசெயங்கொண்டா ர்நாட்டிற், சாட்சிக்காரனைப்பணியார்சண்டைக்காரனைப்பணியத்தரு மென்பாரே. (௯௯)

## வாரிஷிகதை.

சிவயோகர்வெகுளியினால்வரிஷியுமகிடமெனச்செனித்தான் பாரிற், பவமடியாற்கற்றவுமைலிங்கப்ராணியைவதைத்தபழியின் றோஷ, நவதீர்த்தமாடியன்றேதொலைந்ததென்பார்செயங்கொண் டார்கலஞ்சேர்நாட்டிற், றவமுடையோர்மனமழுங்கச்செயப்படா தென்றுலகோர்சாற்றுவாரே. (௱)

ஜெயங்கொண்டார் சதகம் முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# திருமுகவிலாசம்.

மதுரைச்சீமை செவ்வற்பட்டு இளையாற்றங்குடி

எழுநகரமென்று சொல்லப்பட்ட

நேமநகரத்திலுதித்த

அழகப்பசெட்டியார் குமாரர்

முத்தப்பசெட்டியார் பாடி

ஊனைநகர் - வீரபண்டாரம் குமாரர்

சுப்பிரமணிய பண்டாரத்திற்கு

அளித்தது.

இஃது

மேற்படியார் பௌத்திரர்

நாராயணஞ்செட்டியார்

கேட்டுக்கொண்டபடி

திருக்கைலாய பரம்பரைச் செங்குந்த சங்கத்தி லொருவராகிய

சிதம்பரம்

அ. இரத்நசபாபதிமுதலியாரால்

சென்னை:

ஸ்ரீநந்து தியலாஜிகல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1896.

உ

கடவுள் துணை

எழுநகரத்தார்பெயராற்பாடிய

# திருமுகவிலாசம்.

## விநாயகர்தோத்திரம்.

காப்பு.

நேரிசைவெண்பா.

இருநிதியஞ்சேருகின்றவேழ்நகரத்தார்மேற்
றிருமுகவிலாசமதுசெப்ப—வருளாற்
குணபதியாமீசன்குழவியெனவுற்ற
கணபதிபொற்றாண்மலரேகாப்பு.

## நான்முகம்.

கலிவெண்பா.

கங்கைநதிதரித்தோர்கண்ணுதலார்சூரனுக்குச்
சங்கையில்லாவாழ்வுதனைக்கொடுக்க வங்கவனுந்
தேவாதிகட்கிடுக்கஞ்செய்ததனாலிந்திரன்பாற்
றேவாதிகள்பலருஞ்சென்றடர்ந்து பூவாளி
வேளையரனிடத்தின்மேவிச்சுராரிடுக்கண்
ஆளாய்ப்பறந்திடவேசொல்லுமென்றார் வேள்சிவன்பாற்

சென்றானமரர்சொன்னசெய்தியெல்லாமீசன்முன்பு
நின்றாங்குரையாணிகரின்மதன் மன்றன்மிகு

பூவாளியச்சிவன்மேற்பொங்குமழைபோனின்று
தூவினானீசனிவன்றுஷ்டனென்றே தாவிமதன்

றன்னையெரித்திடவேதானவரும்வானவரும்
பன்னுஞ்செபதபஞ்செய்பண்ணவருந் தநிலைவிட்

டோடினர்ந்நாளொருகோடிசென்றபின்பு
கூடினாரிந்திரன்பாற்கோவென்றே கூடுமுன்னே

சத்தரிஷிமாதர்தமக்கக்கினிபகவான்
மெத்தமயல்கொண்டவன்றன்வீட்டில்வந்து சித்தநொந்தே

யன்னமருந்தாதிருந்தானவண்சுவாகா
ளென்னவென்றாளுள்ளதியம்பினா னன்னயமா

வென்றன்றிராணியினியறிவீர்சத்தரிஷி
துன்றுமடவார்களுன்னைத்தோயவே யொன்றுமுத்தி

செய்வனென்றாணல்லதெனச்சிந்தைமகிழ்ந்தக்கினிதா
மெய்பொடித்துச்சத்தரிஷிமின்னாரின் மைவிழியா

ளாறுரிஷிமாதர்வடிவாகினாளச்சுவாகாள்
தேறவொண்ணாதாசதனைத்தீர்ப்பையென்று கூறியே

யொவ்வொருத்தியாய்ச்சென்றுலகத்திற்றன்மனசு
செவ்வையொத்துக்கொண்டேயறீர்ந்தனனே திவ்ய

வருந்ததியைப்போலவடிவாகமாட்டாதுள்ளம்
வருந்திக்கணவனிடம்வந்தா டிருந்திழைமா

ரின்னொருத்தியேதுவரவில்லையென்றாளுள்ளபடி
சொன்னவற்றைக்கேட்டுத்துயர்தீர்ந்தா னிந்நிலத்திற்

சத்தரிஷிஞானத்ருஷ்டிதன்னாலறிந்துகம
லத்துமடவாரையருகழைத்துச் சத்தி

யருந்ததிகற்புக்குங்களாறுபேர்கற்பும்
பரிந்துபழிமுதென்றுபகர்ந்து — திருந்துஞ்

சரவணப்பொய்கைக்குட்டவசுசெய்வீரென்றே
யரிவையரைப்போவென்றனுப்பத் — திருநுதலார்

சத்தரிஷிவாக்காற்சரவணப்பொய்கைக்குள்வந்து
சத்தியமேயெண்ணித்தவஞ்செய்தா — ருற்றதெய்வ

மன்னவனுந்தேவர்களும்வந்தக்கினிபகவான்
றன்னையருகழைத்துச்சாற்றினு — ரென்னவென்றூற்

சூரன்செயுமிடுக்கண்சோமன்றரித்தவர்பா
லீருறைத்துமீளுமென்றார்நேசமாய்ச் — சீருடனே

செல்லுமுன்னேமாலாய்ச்சிவனுமிடப்பாக
மெல்லியலுமொன்றானவேளையிலே — மெல்லநடந்

தக்கினியோன்பொற்கதவையண்ணினன்மெய்வெளிச்ச
மிக்கசுடர்போலேவிளங்கியதாற் — றிக்கெனவே

சங்கரருமக்கினியோன்றன்னைக்கண்டேமனசு
சங்கோசமாய்விரைந்துதாமெழுந்தா — ரங்கவர்க்கு

வித்துபிரவேசிக்கவீறுமெழிலக்கினியே
வந்துகையிலேந்தெனவழுத்தினு — ரந்த

வரன்விந்தைத்தாங்கினிறவக்கினியோன்றன்னைத்
திரமாகவித்தவிந்தைச்சீரா — யுரமாகத்

தாட்டிகமாய்க்கொண்டுசரவணப்பொய்கைக்குளிதைப்
போட்டுவிடுமென்னப்புகன்றார்கள் — கேட்டவனு

மக்கணமேவிந்துதன்னையந்தச்சரவணப்பொய்
கைக்குள்விட்டுவர்தான்கருணையுடன் — மிக்கவிந்து

மாறுகுழந்தைகளாயக்கங்கையிற்பிறந்து
மீறிவிளையாடும்வேளையிலே — கூறரிய

வீஸ்வரருமீஸ்வரியுமேகாந்தமாகமந்த
வாசமாமந்நதியில்வந்திடவே யீஸ்வரிபார்த்
திந்தநதியிற்குழந்தையேதென்றடேவர்பிரா
னுந்தன்குழந்தையென்றருண்மகிழ்ந்து விந்தையுட
னறுதலையுஞ்சேர்த்தாவலுடனசை
மீறியெடுத்துமடிமீதில்வைத்தே யாறிரண்டு
காலுமுருவுமிருகாலாக்கிச்சேர்த்தெடுத்து
வேலுமொன்றாய்மிக்ககரம்பன்னிரண்டாய்ச் சிலமுட
னறுசிரசாய்த்தேவர்க்காறுதலையாமெனப்பே
ராறுமுகமென்றேயரனுரைக்க வீறு
மமையுந்திருமுலைப்பாலூட்டிக்கொடுபோன்
சமையத்திலங்கேதவஞ்செய் யமைநிகர்தோட்
சத்திரியஷிமாதரரன்றட்டணிந்துதங்களுக்குப்
புத்திரனென்னவென்றுபுகன்றார்க ளத்தரும்பார்த்
திந்தக்குழந்தையைக்கேளென்னவவர்கேட்கச்
சிந்தைமகிழ்மதலைசெப்புமன்று முந்துலகிற்
கார்த்திகைநட்சத்ரங்கருதுவோர்தங்கள்வினை
மாற்றியவர்கேட்டவரங்கொடுப்பேன் கார்த்திகைநட்
க்ஷேத்ரப்பதவியிலேசெல்லுவீரென்றுதூய
ராற்றிமடவாரையநுப்புவித்துச் சூத்திரங்கள்
செய்நசுவாகாடனக்குஞ்சேவித்தோர்தங்களுக்கு
மெய்யிலக்குபீடையொடுவிக்கினங்க ளெய்துகின்ற
போதிவையெல்லாந்தீர்த்துபோகச்சுவாகாளென்
றோதவுடனேபயங்கொண்டோமே யாதலினா
லிந்தப்பெருமையுமக்கென்றவர்சொல்லச்
சிந்தைமகிழ்ந்துசிவனுமையும் பிந்தா

திடுக்கியிருகரத்தாலேந்தியுமையாள்பாற்
கொடுக்கவளர்ந்தகுமரேசா மடுக்கரையில்

வண்டாடும்பூங்கமலமாதுவிளைபாடிவளர்
குன்றுக்குடியிற்குமரேசா சென்றன்று

வீறுமசுரர்குலம்வேரறுத்துச்சூரனுடல்
கூறாய்ப்பிளந்தகுமரேசா தாரணியி

லற்றவர்க்குத்தாரகமாய்அண்டர்களுடைக்குக்
கொற்றவனாய்வந்தகுமரேசா வற்சுட

ரம்பனையகண்ணுடையவானைகுறவள்ளியிரு
கொம்பனையர்க்கேற்றகுமரேசா நம்புதலாய்த்

தேடுமடியார்தமதுசிந்தைதனிலேயிருந்து
கூடிவிளையாடுங்குமரேசா தாடாண்மை

யன்றசுரர்நெஞ்சமதிர்கனகவேல்வாங்கிக்
குன்றுருவவெய்தகுமரேசா மன்று

ணலத்தையறியாச்சமணர்நாலாயிரரைக்
கொலைக்கழுவில்விட்டகுமரேசா பலத்தெழுந்து

நீலநிறச்சேவறன்னைசித்தங்கையிற்பிடித்துக்
கோலமயிலேறுங்குமரேசா சால

மிடிதீர்த்தமரர்நமைமிக்கதெய்வலோகக்
குடியேற்றிவைத்தகுமரேசா படிபுகழுஞ்

சந்திரசேகரர்க்குந்தையல்சௌந்தரிக்கும்
சிந்தைகளிகூரவந்தசேயனே யந்தமுயர்

மான்மருகாகங்கைமகனேவேண்மைத்துனனே
வேன்முருகாயாவருக்குமெய்ப்பொருளே கான்சே

ரொருமான்மகடனுடனுற்றதெய்வமங்கை
யிருமாதருக்குமிறைவா கருணைதரு

மும்மூர்த்திகடமக்குமூர்த்தியேநால்வேதச் செம்மைமிகு
சிம்மாதனத்திருக்குந்தேவனே

மஞ்சுமுகனுநவுமாறுமுகனேயெழு ரஞ்சிதமா
மஞ்சுலவுமங்கைமலேயானே

யெட்டானைக்கொம்பைநெஞ்சிலேற்றிரத்னப்பந்திகளைத்
திட்டமுடனேயமுத்தஞ்சேவகத்திற் கெட்டியெனும்

பத்துமுடிராவணனைப்பட்டுருவவாளிதொட்ட யுற்றாரினை
கத்திரிகையோன்மருகாகாவலனே

தன்னந்தனித்தவர்க்குஞ்சாலப்பசித்தவர்க்கு யிந்நிலத்திற்
மன்னங்கொடுத்தாதரிப்பவனே

கார்த்திகைநட்சத்ரங்கருதுவோர்சஞ்சலத்தைத் சாற்றரிய
தீர்த்துப்பலன்பெருகச்செய்பவனே

சட்டிவிரதந்தனையநுட்டிப்போர்கடமை திட்டமுடன்
மட்டில்லாப்பாக்கியத்தில்வைப்பவனே

சோமவாரத்தைத்துதிப்போர்கடம்மனதி பூமிபுகழ்
னேமமதனைக்கொடுக்குநேயனே

வெள்ளிக்கிழமைவிரதமுற்றபத்தர்கட துள்ளுந்
முள்ளத்திலேயிருக்குமுத்தமனே

தந்திமுகம்படைத்துச்சப்பாணியாயிருக்குஞ் சந்தமுஞ்
தொந்திவயிற்றோனுக்குச்சோதரா

சித்தசனார்க்குந்திசைமுகனுக்குஞ்சிறந்த வெத்திசைக்கும்
மைத்துனனுவந்தமயில்வாகனா

வீறுதிருச்செந்தூர்மிக்கபரங்குன்றமுத நீறணியு
லாறுபடைவீட்டுக்கதிகாரா

மக்கினிக்கண்ணன்கைலையம்பதியாமீசனருள் திக்கடவி
கைக்கனிக்குச்சுற்றிவருங்காங்கேயா

மானுக்கும்பூமிமடமானுக்குஞ்சீதையெனு
மானுக்குழிக்கமருகனென்றே மீனமதித்

தேரடியிலின்றிதெல்லாஞ்செப்பினேனக்கேட்டுவெற்றிக்
கூரியவேற்கையார்குமரேசன் பார

விடும்பேசனைக்கூவியிப்பொழுதேசென்றங்
கடிவாரத்தேயொருவனுரோ திடமாகப்

பன்னுதமிழ்நம்மேற்பகர்கின்றானீவிரைந்தே
யன்னவனையிங்கேயழையெனவே சொன்னவுடன்

றுக்கிடும்பன்வந்துன்னைச்சண்முகவருத்தாரம்
வாக்குரைத்தார்நீயுமின்றுவாவெனவே பாக்யமெனச்

சென்றேனவர்பாற்சிகண்டிமலையாதிபனைக்
கண்டேன்மனதுகளிகூர்ந்தேன் கொண்டாடித்

தோத்திரங்கள்செய்தேன்சுகந்தங்கள்வீசுதிருக்
காத்திரத்தைக்கண்டேன்கருணையுடன் போற்றரிய

செந்தாமரைத்தடமுந்திவ்யகரம்பன்னிரண்டும்
சந்த்ரோதயம்போலச்சண்முகமும் விக்கைபெறுஞ்

சேவற்கொடியுஞ்சிறந்தமயில்வாகனமு
மூவர்மனமெச்சுமுனைவேலுங் தேவர்மட

மாதுவள்ளியம்மைமகிழ்வினிதிருக்குங்
கோதறுதேன்வாயான்குமரனையென் றீதறவே

கண்டேன்மனத்திற்கவலைவறுமையெல்லாம்
விண்டேனெனதுடலம்விம்மினேன் ணண்டர்பணி

கந்தாகடம்பாகதிர்வேலாகங்கைபெற்ற
மைந்தாமயூரகிரிவாசா நந்தாக்

கருணைக்கடலேகனிந்துருகிப்பாடு
மருணகிரிநாதர்க்கருள்வோய் திருவிருக்கும்

பூங்கொடியாள்வள்ளிபுனத்துக்கொருநிழலாய்
வேங்கைமரமாகிநின்றவேலோனே பூங்கமலத்
தண்ணலைவன்சிறைக்குள்ளாக்கிவைத்தாய்சூரையென்று
விண்ணவர்க்குமிக்கசிறைமீட்டுவந்தா யண்ணலுக்கு
நன்னயமாகச்செவியினற்பிரணவப்பொருளைச்
சொன்னவனேகுழுஞ்சுடரொளியே என்னையின்று
காப்பாற்றவேண்டுமென்றேன்கந்தர்திருவாய்மலர்ந்து
வாய்ப்பாயுரைத்ததமிழ்வாணனே தாப்பாயுன்
றூரையுமுன்றந்தையுயர்பேரையுமுன்றன்
பேரையுஞ்சொல்லென்றார்பிரியமுடன் சீர்பெறவே
விற்பனஞ்சேரருணைவீரபண்டாரத்தின்மகன்
சுப்பிரமண்யனென்றுசொன்னேனு னப்போதி
லிந்தநகர்க்குள்ளூரீரைங்காதங்கடந்து
வந்ததென்னவென்றுவழுத்தினார் சந்ததமும்
போகாவறுமைபுலிபோலவென்னுயிரும்
பாகாருந்தன்மைப்பசுபோல வேகமுறும்
துன்பக்கருடனுடன்றேயரவமென்னுயிரு
மின்பமணுவத்தனையுமில்லாமன் முன்புகண்ட
நச்சரவைப்பாய்ந்துகடனமிடுந்தோகைமயில்
பச்சோந்திக்குஞ்சும்பமழைமையைப்போன் மெச்சுசெல்வ
மில்லாவறுமையினலில்லாண்முன்வாய்பேசச்
செல்லாமனெஞ்சந்தியங்கியே நல்லோர்கள்
கூடுசபைக்கேகமனங்கூடாமலேவிரைந்தே
யோடியொளித்தேனுறுகணல் வாடுவதால்
நாடுதொறுஞ்சென்றுநடந்தலுத்துப்பேர்கேட்டு
மூடர்களைப்பொல்லாதமூர்க்கர்களைப் பாடுதமிழ்க்

தீயாரைச்சார்ந்தோர்க்கிடுக்கண்செய்வோரைமிகத்
தீயாரைமாருச்சினந்தோன்றப் பேயான

சண்டாளரைப்புரட்டுச்சல்லியரையேழைமுகங்
கண்டிரங்கீரனுத்தக்கயவர்களைக் கொண்டாடி

காமனென்றுஞ்சோமனென்றுங்காண்டிபனென்றும்பலத்தில்
வீமனென்றுமிக்கவிதுரனென்றும் பூமிபுகழ்

தென்னனென்றுமிக்கதிருமாலென்றுங்கொடைக்குக்
கன்னனென்றுஞ்செல்வக்கனகனென்று நன்னயஞ்சேர்

மேருவென்றுங்கொண்டலென்றும்வேண்டியதெல்லாங்கொடுக்குந்
தாருவென்றும்பாடிச்சலித்தலுத்துச் சீருயர்ந்த

மஞ்சரியமோர்பணமாய்வண்ணமுக்காற்பணமா
யஞ்சுபதம்பாடியரைப்பணமாய் மிஞ்சியகூத்

தாட்டுக்கிசைநாடகத்துறைக்கோர்பழைய
வேட்டியாய்ப்பத்துவிருத்தமுடன் சீட்டுக்

கவிக்கோவோர்நாள்வயிற்றுக்கஞ்சியாய்வெண்பா
செவிக்கினியமுத்தமிழுஞ்சேரப் புவிக்குளொரு

பாக்குக்கும்வெற்றிலைக்கும்பாவிகளைச்சொற்புகலச்
சாக்குக்கும்பாடிச்சலிப்பாகி நாக்குலர்ந்து

எடும்புண்ணாகியெழுத்தாணியுந்தேய்ந்து
பாடுமனமும்பரதவித்தே யேடெழுதிச்

சுண்டுவிரலுங்காய்த்துத் தொண்டைகம்மல்பாடியதாற்
கண்டதல்லாலோர்பலனுங் கண்டிலேன் வண்டரவர்

செப்புமுலைவேசையர்க்குந் தீக்குத்திருடருக்குந்
தப்புமுன்னே கட்டித்தலைக்கீழாய் மெய்ப்பூஞ்ச

லாட்டுவார்க்குஞ்சவுக்கோடைந்தும்மணிக்கயிற்றின்
மூட்டுவார்க்குங்கொடுப்பர்மூடரவர் பாட்டுனர்க்குச்

செய்யாரினியிவர்பாற்செல்வதினிற்சாரமில்லை
யையாவெனை நீநன்காதரித்துத் தொய்யாமற்
காவென்றேனப்பொழுது கந்தர்திருவாய்மலர்ந்து
வாவென்றென்னோடுவசனிப்பார் மேவியசீ
யெம்பாலுன்பாட்டை யியம்பினுய்வண்புலவ
வும்பாலெம்பாட்டையுரைக்கக்கே ணம்பாவென்
றந்தையுமோர்பெண்ணைச் சடையில்வைத்தாரச்சடையி
லந்திலாவுமத்திலையணிந்தார் முந்த
விடுகாட்டெலும்பை யெடுத்தணிந்தாரன்றிக்
கடுவாயரவுகழுத்திட்டார் திடமொடுறுந்
தொண்டர்தமையுண்டார்சூழ்ந்தகடனஞ்சையுண்டார்
கண்டிருந்தும்பிள்ளைக்கறியுண்டார் கொண்டாடிச்
சீர்வேடனெச்சிலுண்டார்தின்றதெல்லாம்பற்றும
லீரேழுலகுமிரந்துண்டார் பாரறியப்
பிட்டுக்குமண்சுமந்தார் பின்னேவிறகுவிற்றார்
மட்டுக்கடங்காவளையல்விற்றார் திட்டமுடன்
வில்லடியும்பட்டார்விசையனங்கையாலொருவன்
கல்லடியும்பட்டுடம்புகண்ணினோர் நன்மதுரை
மாறன்பிரம்படியும்வாங்கினார்பாறனக்காய்
வீறிடையன்கையரிவாள்வெட்டுண்டார் கூறரிய
சூலாயுதம்படைத்தார்தொல்வேடன்றன்செருப்புக்
காலாலுதைக்கக்கனிந்திருந்தார் சீலமுடன்
மாடெடுக்கப்பெற்றார்மருட்கொண்டார்தில்லைதனி
லாடெடுத்தாரென்றுபெயராயினார் தாடாண்மை
யும்பர்தொழுங்குற்றாலத்தரிலுயர்ந்திருக்குங்
கும்பமுனிகையாற்குறுகினார் செம்பதும

வேதன் சிரசிலொன்றைவெட்டினார்மன் மதனைப்
பார்தாதிகேசமெல்லாம்பார்த்தெரித்தார் சூதாய்த்தேர்
வண்டிற்கால்சிற்சோமன்மைந்தனையும்போட்டரைத்தார்
சண்டனெனுமேமன்றனைவதைத்தார் சென்றெதிராய்
முப்புரத்தைவென்றகதைசமூவுலகிலுள்ளவர்கள்
செப்புகின்றார்கேட்டாற்சிரிப்பாமே யிப்படியென்
றந்தைபிரபலங்கடாயாளவளப்பமதை
யுர்தனுக்குச்சற்றேயுரைக்கக்கேள் பிந்தாம
லம்பலத்திலாடினா ளம்புவிக்குந்தாயானாள்
கம்பநதியிற்றவசைக்கொண்டாள் கும்ப
முலைகளுமூன்றாணமுனைப்புலித்தோல்போர்த்தான்
மலையரையனுக்குமகளானாள் பலவலைஞர்
சாதியிற்சேர்ந்தாள்சத்திதானென்றாளம்மலைமேற்
றீதறவேவீற்றிருக்குந் தேவியக்த மோது
முருமாறியேருறத்திக்கொப்பாகச்சென்று
கருமாறியேகைக்கொடுத்தாள் பரிவாகச்
செல்லாயிரங்கோடிச்சீவர்க்கிருநாழி
நெல்லாற்படியளந்தநீலியென்பார் சொல்லுவதென்
றந்தைபட்டபாடனைத்துந்தாயார்க்குண்டேபுலவா
வென்றமையன்செய்தியியம்பக்கேண் மூந்தவனை
தந்தைக்குமுன்பிறந்தார்தந்திமுகமாயினார்
விந்தைப்பெருச்சாளிமேற்கொண்டார் மூந்த
வாதக்காலானார்வயிறுபெரிதானார்
பாதைகுளம்வீதிபலவிடங்கண் மீதிருந்தே
யன்னையைப்போற்பெண்டேடியாயாசமாய்மனதி
லுன்னிமரத்தூறிலுட்கார்ந்தார் பின்னையென்றன்

மாமன் வரலாற்றைவழுத்தக்கேளுந்திதனிற்
பூமனையும்பெற்றார் புவிபுரக்க நேமி

பதித்தார் துளசிதனையணிந்தார்பாம்பை
மிதித்தார்பாலாழிமேல் வெள்ளக் குதித்தோ தா

ராவிலையின் மேற்றுயின்றார் வையமேபோட்டிவருங்
கோலிலையும்பள்ளிகொண்டார்கூசாமற் சால
மலையாளை நெஞ்சில்வைத்தார்மாமோகினியா
யேனையீன்றவரோடிணங்கிக் கனமாய்

அரியரபுத்ரனென்றேயாண்பிள்ளைபெற்றார்
தெரியாதபேர்களுண்டோசெப்பும் பெரியதொரு
ஆடகனைக்கொன்றங்கவன் குடலைமாலையிட்டுக்
கூடிருக்கரத்தங்குடித்துவிட்டார் கோடியெனு

மாய்ச்சிமுலைப்பாலையுண்டாராவலடங்காமற்
பேய்ச்சிமுலைப்பாலும்பிடித்துண்டா ராய்ச்சியர்கள்
பாடிதனிலுள்ளோர்பாற்பொங்கலிட்டதெல்லாங்
கூடியுண்டார்பாற்றயிருங்கொள்ளையுண்டார் நாடரிய

மண்ணையுண்டார்பாடிமடவாரறியாமற்
கண்மருட்டியாட்டைக்களவாண்டார் வண்மை
குருந்தேறிக்கொண்டார்குதிரைகிடையாமற்
பருந்தேறிக்கொண்டார்பகட்டாய் வருந்தாமல்

காய்ச்சியபாற்றன்னைக்களவாண்டுதன்னுடைய
வாய்ச்சிகையாற்கட்டுண்டடியுண்டார் கூச்சமின்றி
யாடவராய்மிக்கபதினாறாயிரமாதர்க்
கூடியேமிக்ககளிகூர்ந்தார் மோடிசெய்து

மாமனையுங்கொன்றுவிட்டார்வஞ்சகமாயண்ணனையும்
பூமிபிரதக்ஷணமாய்ப்போகவிட்டார் நேமி

பானுதனைமறைத்தார்பார்த்தனுக்குத்தேரோட்டிக்
கானிலுரையைவரையுங்காத்திருந்தார் மேன்மையுடன்
சொல்லவொணாவஞ்சத்துரியோதனுநிகளைக்
கொல்லவினைகவிவரங்கூறினார் சொல்லுவதென்
பாரினிலேபுரட்டுப்பண்ணியநிஷ்டூரமெல்லாம்
யாருமறிவார்களதுவல்லாமற் சீர்கிழவிக்
கூனுநிமிரக்குறித்தெய்தார்மாரீசன்
மானையெய்தார்தென்னிலங்கைவாழரக்கன் சானகியைக்
கொண்டேகமிக்கசிறைக்கோலமுற்றபெண்ணைநத்திச்
சென்றழைத்துக்கொண்டவகைதீராதே வண்டரன்று
காட்டிவருக்கொட்டாமனற்சிறுதாயார்வனத்தி
லோட்டிவிட்டார்கண்மூன்றுலகறியப் பூட்டகமா
வஞ்சகப்போராய்மறைந்துவாலியைக்கொன்றார்காட்டிற்
றஞ்சமற்றபெண்பிள்ளையைச்சங்கரித்தா ரஞ்சிதமாய்க்
கல்லைப்பெண்ணாக்கிவிட்டகாலாந்திரன்செய்தி
சொல்லத்தொலையாதேசொற்புலவா நல்லதினி
யெந்தனியற்செய்தியியம்பக்கேள்யாவருக்குங்
கந்தனென்றுபேரானேன்கள்வனைப்போன் மூர்த்தமூர்த்தக்
கோழிபிடித்தேன்குறத்திதனைமாலையிட்டேன்
பேழைவயிற்றனுக்குப்பின்னானே னீள்கூந்தல்
வேடிச்சிக்காய்வனத்தில்வேங்கைமரமாகிமயல்
வாடிக்கைமாதருக்குமாலானேன் றோடியத்
தந்தைக்குபதேசஞ்சாற்றினேனப்பனுக்கு
விந்தைக்குருக்களென்றார்மேதினியோர் தந்தைவெருண்
டானாலும்பிள்ளையதிகப்ரசங்கியென்று
மீனாக்கியேகடலில்விட்டுவிட்டார் கானிலத்திற்

நேர்பிறவியானேன் சிவிகைதனிலேறுவர்முன்
கூர்மயின்மீதேறிக்கொண்டிருந்தேன் சாரமாய்
வெண்ணீறணிந்தேன் மிருகடப்பந்தாரணிந்தேன்
கண்ணீராரு னேன் கருணையுடன் பண்ணுகவிக்
காம்புலவாகேட்டிலையோவாண்டிதனையடுத்தாற்
சாம்பர்பறக்குமென்பார்தாரணியின் மாம்பழத்துக்
காகவேநான்கையிலயம்பதியைச்சுற்றுமுன்னே
தாகத்தாலென்றமையன்றந்தைதனை வேகமாய்ச்
சுற்றியடிபணிந்துருந்தக்கனியதனைப்
பற்றிக்கொண்டார்நான்பதறியே மெத்த
வருகோபத்தாலேமாதாபிதாவைவிட்டுத்
திருவாவினன்குடியிற்சென்றேன் பரிவாக
வன்னைவந்தாளென்னையழைத்தாளொருதரமே
யென்னபிள்ளாய்செய்தகுறையென்ன முன்னஞ்
சகிப்பாரில்லையாதமையன் புசித்தாற்
பகைப்பாரோமாம்பழமோபாரந் தெகிட்டாப்
பழநியெனவேபகர்ந்தாளதனாற்
பழநியென்றும்பேரானேன்பண்பாய் விழுவார்
மலைவாயலைவாயில்வாழ்க்கையுற்றேன்பின்னுஞ்
சொலல்வேண்டுமென்றாற்றொலையா நிலையிருப்பு
வேலொழியவென்கையில்வேறுபொருளுண்டானும்
சாலவுரைப்பாய்நான்றருகிறேன் ஞாலமிசை
பங்கமில்லைநாங்கள்பட்டபாடெல்லாமுன்னிடத்தில்
சங்கதியாய்ச்சொன்னேன்றமிழ்ப்புலவா வெங்கள்பிழைப்
பிப்படியெல்லாமிருக்கவென்பாலினுன்றுயர
மெப்படிச்சொல்வாயென்றியம்பினு ரப்போ

தூரன்மத்தளத்திடைப்போயுற்றதுயர்சொன்ன
வருமைக்கிணையென்றதிசயித்துக் கருணையுடன்
தாமரைசூழ்வாவிதனிற்போனவண்டெஞ்ச
மாமதுவைத்தானுமுண்ணுமற்போமோ நேமியினுன்
மாலுக்காகப்பயந்துவந்துதஞ்சமென்றுசொல்லச்
சீலகுக்ருக்ஷேத்திரன்றனக்காய் ஞாலமிசைத்
தாராருநீள்விசயன்சுமோதரனுடனே
போராடிக்காத்ததுவும்பொய்யலவே சீர்முனியைக்
காக்கும்வகைக்கரனார்காலன்றனையுதைத்து
மார்க்கண்டனைக்காத்தவாறுபோற் றீர்க்கமுட
னென்னையடர்கலிகளெல்லாந்தீர்த்துப்பவிஷூம
தன்னைக்கொடுப்பாய்தயாபரா வன்னைதெய்வம்
நீயேயெனக்கல்லாலனீடுகதியில்லையென்றேன்
மாயோன்மருகன்மனமகிழ்ந்து நேயமுடன்
தன்மையதாமோதனக்குவந்தகார்யமதிற்
பின்னுக்குவாங்குவரோபேருலகி னன்னயமாய்
மிக்கசனமாய்த்தலைநுவீட்டில்விருந்துவந்தாற்
பக்கத்திற்றள்ளுவதும்பண்பலவே யக்கதைபோ
னம்மாலழைத்தகவிநாவலாவுன்னைநான்
சும்மாவிடாமலொன்றுசொல்லக்கே ணம்மடியார்
பார்த்திவர்காவிரிப்பூம்பட்டினத்தின் முன்வைசியர்
கோத்திரத்தின்மிக்ககுபேரனைப்போல் வீற்றிருக்கு
மங்காளிற்பாண்டிநகர்க்கானகுடிவேண்டுமென்று
தென்னுடன்றேசிகர்பாற்சென்றுரைத்து முன்னான
மெத்தவுபசாரம்வேண்டுவதெல்லாமுரைத்துச்
சித்தந்திரும்புதற்குச்செய்திசொல்லிச் சத்தியமாய்த்

திங்கள்கதிருள்ளமட்டுந்தேசிகரேயென்றட்டி
லுங்கண்மரபிற்கொருக்காலும் பங்கம்
வரவொட்டேனென்றுவலதுகையைக்கொடுத்தே
யிரவியொளிரதத்திலேற்றிப் பரிவாய்
வளமையுடனழைக்கவந்தேனலமா
யிளைசைமாநைதப்பதியிருந்தார் களிகூர்ந்தே
யஞ்செழுத்தையுட்செவிப்போரல்லும்பகலுமெனை
நெஞ்சில்விட்டுநீங்காதநிண்ணயத்தா ரஞ்சிதமாய்த்
திருமாற்கடிமைசெய்வோர்தெய்வமெல்லாமொன்றென்
றுரிமையுடன்போற்றிவளர்வுற்றோர் சிருநிதியம்
வேண்டினருக்குதவிமிக்ககனத்தைப்பெற்றோர்
பாண்டிநாடாள்வோன்பதம்பணிவோர் நீண்டபுகழ்த்
தேசாதிபர்புகழுஞ்செய்யதிருப்புனவை
யாசானழகரடிபணிவோர் நேசமுட
னன்னைதந்தைதெய்வமுதலாசானைப்போற்றுதலாய்
மன்னவரைக்கூடவணங்காதார் முன்னுயர்ந்த
மேருகிரியுளைத்தும்வேழந்தனைநிறுத்தும்
பேருலகின்மிக்கானபேரானோர் யாரு
மதிசயிக்கக்காவேரியாறுதனைப்பஞ்சுப்
பொதியாலடைத்தபுகழாளர் மதியாற்
கடலிலெறிந்தபொன்னைக்காசினியோர்தாமெச்
சிடவழைத்தவேலேலசிங்க நெடுங்கிணற்றில்
வீம்புக்குத்தன்வீட்டில்வெள்ளாட்டிபாற்சவடி
தாம்பிட்டுநீரிறைத்ததாஷ்டியர்க டேம்பவே
கல்யாணவாயிலிலேகாவணக்காலுக்குயர்ந்த
நல்பவளக்காலதனைநாட்டினோர் வல்லிரவில்

மற்கதவுவெள்ளிதனைவாங்கிவிடவக்கணமே
பொற்கதவுநாட்டிப்புகழ்படைத்தோ — ரிப்புவியில்

சீரகப்பூந்தாரணிந்தோர்சிங்கக்கொடிபடைத்தோர்
காரிணையாச்செம்பொன்கவிக்கிவோர் — பார்புகழுங்

கத்தனிளைசைக்கைலாயநாதனையும்
நித்தியகல்யாணியையுநெஞ்சில்வைப்போர் — நத்தினை

யாட்கொண்டநாதருடனுஞ்சிவபுரத்தேவி
தாட்கமலம்போற்றிவளர் தாட்டிகர்கள் — வேட்காம்

வடிவாரும்பேட்டைவளரொளியோர்மிக்க
வடிவுடையாளைப்பணியுமாண்பார் — படிபுகழுந்

தெள்ளுதமிழ்சேர்திருவேளூர்க்கற்பகமாம்
பிள்ளையாரைப்பணியும்பேராள — ரள்ளிநிதி

செய்யுநியமச்செயங்கொண்டசோளீசர்
தையல்சௌந்தரியைத்தாள்பணிவோர் — வையமகிழ்

பூவுடையவூரிற்புகழ்தேசிகரடியோர்
பாவுடையமாதினடிபணிவோர் — தேவர்புகழ்

வேலினமரின்மிகுத்தகண்டீசரொடு
சாலவுங்காமாட்சியிருதாள்பணிவோர் — மேலிப்பை

தான்றோன்றியீசரையுஞ்சங்கரியையும்போற்று
மான்மதஞ்சேருந்துளவமார்மார்பர் — தேன்சிறந்த

மாதைப்பதியில்வளருமைஞ்ஞூற்றீசர்மகிழ்
காதல்பெரியவளைக்கைதொழுவோர் — சாதகமாய்

ராசசிங்கம்வாழ்பூமிநாதர்சிவகாமியையும்
நேசமுடன்போற்றிநிறைந்திருப்போர் — வாசனையாய்

ஞானிலத்தோர்கொண்டாடநம்மிடத்தின்மிக்கவன்ன
தானமடங்கட்டிவைத்ததாளாளர் மேன்மை

திருவாவினன்குடியிற்சென்றெதிர்த்தபேர்க்குத்
தருவாய்க்கொடுக்குமன்னதான நிருநித்திய

நாடறியப்பூவுலகினுள்முந்திரிதேடிக்
கோடியளிக்குங்கொடையாளர் தேடிநிதி

மாயேஸ்வரர்பூசைமாகுருதரிபூசை
சேயார்மும்மூர்த்திபிரதிஷ்டை மாயாத

ஆருணிகள்கூபமிவையுண்டுபெண்ணிமிக்கதர்மங்
தாரணியிற்செய்திட்டசற்புருஷர் வாரஞ்

சிகரத்திலேற்றிவைத்ததீபம்போலேழு
நகரத்தார்யாருநமதடியார் மிகவவர்கள்

வீரருனைக்காக்கவேண்டித்திருமுகமுந்
தாரேனவரிடத்திற்குஞ்சென்று பூரணமாய்க்

கனகவணிகேசரிருகையிற்றிருமுகத்தை
மனமகிழவீவாய்வணிகேச ரனைவர்களுங்

குன்றக்குடியிற்குமரர்திருமுகத்தைக்
கண்டவுடனேகளிகூர்ந்து கொண்டாடி

யுன்னையடர்கலிகளோடக்கனகநிதி
தன்னைக்கொடுத்தாதரிப்பார்க ளிங்கேரஞ்

செல்லுவாயென்றுதிருமுகந்தந்தென்னை
யல்லறவிரவனுப்பினார் நல்லதென்றே

யிங்கிதமாய்மெய்கூர்ந்தினிதாய்நடந்துகொற்ற
மங்கலத்திற்சென்றேன்வணிகேசர் சங்கதியாய்க்

கூடியுலகாயிகோயிலுக்குநேர்வடக்காய்
நாடிவிடுதிக்குலைன்னயமாய் நீடிவளர்

மாவுக்குமேற்காய்வணிகேசரெல்லாருங
காவணத்துக்குள்ளிருந்தாா கண்டேனுன் பூவைத்த

இந்திரனைப்போலிருந்தவேப்பூநகராதிபர்க்குக்
கந்தர்திருமுகங்கையிற கொடுத்தே னந்சமுடன்

வித்தாரக்கைவாங்கிவேலர்திருமுகத்தை
வைத்தார்சிரசில்வணிகேச ருற்றுகான்

குன்றுக்குடியிற்கு மயூர்பாலென்றயனொ
விண்டதுவுமென்னிடத்தில்வேலவரும் பண்பாய்ச்

சலிப்பையுரைத்ததுவுஞ்சாகரந்தான்சுட்டாற்
கலக்கச்சலமுண்டோகந்தா கலத்துடனே

யென்கவலைதீரவகையென்னவென்றுகேட்டதவும்
வன்மைக்குபேரவணிகருக்கா யன்பாந்

திருமுகத்தைத்தந்ததுவுஞ்செட்டினேனைப்போ
மருவுநிதிமிக்கவணிகேச ரொருமையுடன்

வந்ததிருமுகத்தைவாசித்தாரப்போது
சிந்தைமகிழ்ந்தேயஞ்சல்செப்பினார் கந்தமலர்

வேணுநிதியீந்தார்மிக்கவஸ்திரங்கொடுத்தார்
பூணுமெனத்தங்கநகைபூட்டினா ரூணுறவா

யுண்டிருக்கநெற்கொடுத்தாரூரும்பலவாகக்
கண்டிருக்கமெத்தக்கனஞ்செய்தார் கொண்டாடித்

திட்டமுடனேவணிகர்செய்யுங்கல்யாணமதிற்
கட்டளையாயோர்பணமுங்கண்டெழுதிச்

சாதனமுர்தந்தார்சஞ்சலமெல்லாந்தீர்த்தார்
மாநனவாளுகவென்னைவாழ்வித்தா ராதலினற்

றுங்கமலையான்வாழி தூய்யதமிழோர்வாழி
யெங்கும்படியாளிறைவாழி மங்களமாய்

வாழுங்குமரேசர்மகராசர்தென்னிலைசை
யேழுகராார்வாழியே.

## திருமுகவிலாசம்

முற்றிற்று. 46!!

---

சுப்பிரமணியர் புலவருக்குத் திருமுகந் தந்தாற்போற் பாடியதால் திருமுகவிலாசம் எனக்காரணப்பெயராயிற்று.

---

| | ரூ. அ. பை. |
|---|---|
| செயங்கொண்டார்சதகம். திருமுகவிலாசம். | 0—2—6 |

இப்புத்தகம் வேண்டியவர்கள் அடியில் கையெழுத்து வைத்தவர் பேருக்கு எழுதி தருவித்துக் கொள்ளலாம்.

ஸ்ரீ அ இரத்நசபாபதிமுதலியார்,
நெ. க - குமரப்பமுதலி தெரு சென்னை.



உ

# விளம்பரம்.

---

இப்புத்தகமும், இன்னும் சுத்தமாக அச்சிட்ட தமிழ்ப் புத்தகங்களும் வேண்டியவர்கள் சென்னை பெத்துநாய்க்கன் பேட்டை நாட்டுப்பிள்ளையார் கோவில் தெருவில் சென்னை இராஜதானி புத்தகசாலையிலும், சென்னை முத்தியால்பேட்டை பவழக்கார தெருவில் ஆறுமுகவிலாச புத்தக சாலையிலும் பெற்றுக்கொள்ளலாம்.